304

தமிழ் மாருதம் 4:11 ஏப்ரல் 94

# சித்தாந்த வித்தகர்

சாவன்னா ராவனமானா

## பிறப்பும் படிப்பும்

''கேட்டார்ப் பிணிக்குந்தகைய வாய்க், கேளாரும் வேட்ப மொழிகின்ற'' திறன் படைத்த சித்தாந்த வித்தகர், புலவர்மணி முரு. பழ. இரத்தினம் செட்டியார் அவர்கள். துன்மதி ஆண்டு ஆவணித் திங்கள் மூன்றாம் நாள் (8-08-1921) வியாழக்கிழமை அவிட்ட நட்சத்திரத்தில், புதுக்கோட்டை மாவட்டம், விரையாச்சிலையில், முரு. பழனியப்பச் செட்டியார்-நாகம்மை ஆச்சி இவர்கட்கு இரண்டாம் மகனாகப் பிறந்தவர். இவர்தம் இயற்பெயர் மெய்யப்பன். இவருடன் பிறந்தோர் ஆடவர் இருவரும், பெண்டிர் நால்வரும் ஆவர்.

திண்ணைப் பள்ளிக்கூடத்தில் அரிச்சுவடி, எண்சுவடி படித்ததைத் தவிரப் பின்னர் எந்தப் பள்ளிக்கூடத்திலும் இவர் முறையாகத் தமிழ்கற்கவில்லை. ''ஆம் வயதில் தம் தந்தையாரோடு மலேசியா [அப்போதைய மலாயா)வின் ''பத்து பகாட்டு'' என்னும் ஊருக்குச் சென்ற சித்தாந்த வித்தகர், அவ்வூர் அரசு உயர்நிலைப் பள்ளியில் 'சீனியர் கேம்பிரிட்சு' வரை ஆங்கிலக் கல்வியே பயின்றார். வருமானவரித் துறையில் சேர்ந்து அரசாங்க அலுவல் புரிந்திருக்க வேண்டிய இவர் நகரத்தார்களின் பரம்பரைத் தொழிலான வட்டிக்கடையில் வேலை பார்க்க நேர்ந்தது, சைவமும் தமிழும் செய்த பெரும் பேறு என்றே சொல்ல வேண்டும்; இல்லாவிடில் இவர் சித்தாந்தத் துறையில் ஈடுபாடு கொண்டு, சைவ சமயத்திற்கு இந்த அளவு தொண்டு புரிந்திருக்க முடியாது.

1945ஆம் ஆண்டில் குழிபிறைப் பெண்ணான மீனாட்சியைத் திருமணம்புரிந்துகொண்டார் இவர்களுக்குப் பெண்மக்கள் நால்வருப், ஒரு மகனும் பிறந்தனர். இவருடைய தந்தைவழி ஐயாவான திரு முருகப்பச்செட்டியார், அப்பரடிகளைப் போன்று, சிவன் கோயிலில் சரியைத் தொண்டு செய்தவர்; மூவர் தேவாரத்தைப் பன்முறை பாராயணம் செய்தவர். தாய்வழி ஐயாவான திரு ஆண்டியப்பச் செட்டியார், இராமாயண - மகாபாரத இதிகாசங்களை முழுமையாகச் சொல்லும் திறம் படைத்தவர்.

இவ்விருவரும், இவர்தம் 11-ஆம் வயதில் அப்போதைய மலாயாவுக்குச் செல்லும் வரையில், இவருக்குத் தேவாரதிருவாசகங்களையும், பெரிய புராணம்-இராமாயணம் மகாபாரதம் போன்றவற்றையும் நன்கு பயிற்றுவித்தனர்.

உலகப் போர் நடந்த காலத்தில் தமிழகத்துக்கு வந்திருந்த சித்தாந்த வித்தகர், மதுரைத் தமிழ்ச்சங்கத்தின்தேர்வுக்கெனப் பண்டைய இலக்கண இலக்கியங்களைத் தாமே முயன்று படித்தார். வேதாந்தக்கருத்துக்கள் நிறைந்த நூல்களையேஆங்கிலத்திலும், தமிழிலும் தொடக்க காலத்தில் இவர் படித்தபோதிலும் சமயக்கொள்கைகளில் தெளிவு பெறமுடியாத நிலையில், சித்தாந்த சாத்திரங்களின்பால் தம் நாட்டத்தைச் செலுத்தினார். திரு. பொ. முத்தையா பிள்ளை அவர்கள் எழுதிய சிவஞான போதச் சிற்றுரை விளக்கம், சிவஞான சித்தியார் சுபக்க உரை ஆகியவற்றைப் படித்ததிலிருந்து, சித்தாந்தத் துறையில் ஆர்வம் கொண்டதோடு, திரு பிள்ளை அவர்களையே தம் சித்தாந்த குருவாக மானசீக நிலையில் கொள்ளத் தொடங்கினார், தாமாகவே பல நூல்களையும் கற்றுணர்ந்து சமய-சித்தாந்த அறிவைப் பெருக்கிக் கொண்டதோடு அமையாது, பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார், திரு வி.க., மறைமலை அடிகள், விபுலானந்த அடிகள் போன்ற சித்தாந்தச் செம்மல்களுடன் பழகிச் சித்தாந்த சாத்திரங்களை ஆழமாக அறிந்து கொண்ட சித்தாந்த வித்தகர் அவர்கள், தமிழகத்தில் பெரிதும் மதிக்கப் பெறும் சித்தாந்த அறிஞர் சிலரில் ஒருவராகத் திகழ்ந்தார்கள்.

## சைவ சமயத் தொண்டு

போருக்குப் பின்னர் மலாயாவுக்கு வேலை நிமித்தம் சென்ற போது, அங்கு வருமானவரித் துறை அதிகாரியாக இருந்த திரு சரவணமுத்து, புதுப்பட்டி திரு முத்தையாச்செட்டியார் ஆகியோரின் ஏற்பாட்டில், சித்தாந்த வித்தகரின் முதல் சொற்பொழிவு, 1951ஆம் ஆண்டு மலாக்காவில் நடை பெற்றது. தொடர்ந்து அருள்நெறித் திருக்கூட்டத் தொடர்பு ஏற்பட்டுச், சைவப் பெரியார் திரு கா. இராமநாதன் செட்டியார் அவர்களுடன் இணைந்து மலேசியா முழுவதும், பட்டி

தொட்டிகளில் எல்லாம் சைவத்தையும், புலால் உண்ணாமையையும், ஒரு தெய்வக் கொள்கையையும் பரப்பி வந்தார். 1954ஆம் ஆண்டில், சென்னை சைவ சித்தாந்த மகாசமாத்துடன் (இப்போதைய சைவ சித்தாந்தப் பெரு மன்றம்) தொடர்பு ஏற்பட்டது. பின்னர்ப் புன்செய்ப் புளியம்பட்டி மறைமலை அடிகள் மன்றத்தின் தொடர்பு ஏற்பட, அதன் தலைவரான அமரர் திரு ஆறுமுகம் அவர்கள், சித்தாந்த வித்தகரின் சித்தாந்தக் கட்டுரைகளைத் தொகுத்துக் 'கடவுளால் முடியாத செயல்கள்'' என்னும் முதல் நூலை வெளியிட்டார்.

1960களில், மலேசியாவின் சிறந்த நாளிதழான 'தமிழ் நேசன்' வழிப் பல்லாண்டுகள் சைவ சமயத் தொடர்பான ஆயிரக்கணக்கானோரின் ஐயங்களை அவர் தீர்த்து வைத்ததை யாரும் எளிதில் மறந்துவிட முடியாது. 1980ஆம் ஆண்டில் சைவ சித்தாந்த மகா சமாசம் நடத்திய சிவஞான பாடிய வகுப்பில், சித்தாந்த வித்தகர் பேசியது, இதுவரை சைவ உலகம் கேட்டிராத ஒன்று எனச் சித்தாந்த வித்தகரின் தலைமாணாக்கரான திரு வைத்தியநாதன் கூறுகிறார்.

தமிழகத்தில் சித்தாந்தப் பயிர் வளர்க்கும் சைவ சித்தாந்தப் பெரு மன்றம், சைவமும் தமிழும் தழைத்தோங்கப் பாடுபடும் சைவ ஆதீனங்கள், கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்க்கும் கம்பன் கழகம் போன்ற பல பெரிய அமைப்புகள்-இயக்கங்களிலும், கடல்கடந்து இலங்கையிலும், மலையகத்திலும் பன்முறை சொற்பொழிவாற்றியும் தலைமை தாங்கியும், அரிய பெரிய கருத்துக்களை வெளியிட்டு வந்தவர் சித்தாந்த வித்தகர்.

கற்றுணர்ந்தோர் மட்டுமே புரிந்துகொள்ளக்கூடிய, கரடுமுரடான பொருள் என்று கருதப் பெற்று வரும் சைவ சித்தாந்த சாத்திரத்தைப் பாமரரும் அறிந்துகொள்ளும் வகையில் மிக எளிமையாகப் பொருள் பொதிந்த நகைச்சுவையுடன் பரப்பி வந்தவர் திரு இரத்தினம் செட்டியார் ஒருவரே என்றால், அதில் இருவேறு கருத்துக்களுக்கு இடமேயில்லை.

## பட்டமும் பாராட்டும்

1959ஆம் ஆண்டில் குன்றக்குடி அடிகளாரால் ''அருள் நெறிச் செல்வர்'' பட்டமும், 1960ஆம் ஆண்டில் மலேசிய சுகாதார அமைச்சராக இருந்த (துன்) வீ.தி. சம்பந்தன் அவர்கள் தலைமையில் மலாக்காவில் ''புலவர் மணி'' பட்டமும், 1962ஆம் ஆண்டில் திரு கா. இராமநாதன் செட்டியார் அவர்கள் தலைமையில் ''சித்தாந்த வித்தகர்'' பட்டமும், 1970ஆம் ஆண்டில் 'கடவுளால் முடியாத செயல்கள்' என்னும் நூலைப் பாராட்டிச் சென்னை இந்து பரிசத்து சபையினரால் ''வித்யா ரத்ன'' பட்டமும், 1978இல் புதுக்கோட்டைத் தமிழ்ச் சங்கத்தினரால் ''செந்தமிழ்ச் செம்மல்'' பட்டமும், திரு இரத்தினம் செட்டியார் அவர்களுக்கு வழங்கப்பெற்றன. மதுரைத் திருவள்ளுவர் கழகத்தார் ''தமிழ்க் கடல்'' என்ற பட்டம் அளித்துப் பாராட்டினர்.

''கடவுளால் முடியாத செயல்கள்'' ''தடைகளும் விடைகளும்'' (இரு பகுதிகள்), ''புலால் தின்பது தீவினையா'', அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவுத் தொகுப்பான ''திருவாசகச் சுவை'', ''36 தத்துவங்கள்''. 'வாலி வதம் சரியா'', ''இதோ சைவ சித்தாந்தம், தெரிந்து கொள்ளுங்கள்'' ஆகியவை, இந்த மாமேதை எழுதிய நூல்களாகும்.

சித்தாந்த வித்தகரின் மணிவிழா மலரில் இடம் பெற்றுள்ள ''சிறுசு''களின் வாழ்த்துக் கவிதையின் சில வரிகள், எளிய நடையிலான விளக்கத்தினையும், உயர்ந்த நடையிலான தத்துவக் கருத்துக்களையும் இவர் கூறும் உயர்பாங்கினை, உள்ளங்கை நெல்லிக்கனி போன்று உணர்த்துகின்றன.

''சிங்கப்பூர் வானொலியில்
சிறுவருக்குக் குறள்தரு-
வார், செந்தமிழ் சேர்
சங்கத்தில் ஒளிவிரிப்பார்.
சித்தாந்த மாநாட்டுத்
தலைமை ஏற்பார்,
கங்கையணி கடவுளினால்
முடியாத செயல்களையும்
காட்டி நிற்பார் ......''

## முடிவுரை

சித்தாந்தமும், சைவமும் செழித்தோங்கச் செயல் புரிந்த சித்தாந்த வித்தகர்புகழ் நிலைபெற்று நின்றோங்குக!

---

### என்ன அவசரம்?

''மழை விடுமுன்
வீடுபோய்ச் சேரவேண்டும்
என்ற
அவசரம் எனக்கில்லை —
என் வீட்டுக் கூரை
மழை நின்ற பின்னும்
நிதானமாய்த் தூறிக்
கொண்டிருக்கும்''!

—ஈ, சு, அ. இரமணகங்கா, எம்,ஏ,